காயல்பட்டணம், ரயில்வே ஸ்டேஷனுக்கு வடபுறமு மஸ்ஜிது ஹமீது பள்ளிவாசலுக்கு வக்பு செய்யப்பட்டுள்ள நன்கொடை விபரம்.

| | | | |
|---|---|---|---|
| (1) | 10—9—1936-ல் | செண்டு | 12 |
| (2) | 21—5—1938-ல் | ,, | 20 |
| (3) | 7—10—1942-ல் | ,, | 18 |
| (4) | 28—2—1944-ல் | ,, | 35 |
| | ஆக மொத்தம் | செண்டு | 85 |

டி பள்ளிவாசல் வகையில் தோல்சாபு முஹம்ம இபுருகீம் அவர்கள் பெயருக்கு 23—11—1944-ல் வாங்கிய செண்டு 30 ஆகக் கூடியது செண்டு 115.

டி பள்ளிவாசலுக்குரிய வீடுகள்

(1) No. 5/29 வீடு 1 (2) No. 5/30 வீடு 1
(3) No. 5/31 வீடு 1 (4) No. 5/32 வீடு 1

ஆக வீடுகள் 4.

இலங்கை, மாத்தளை அலுவிஹாரை. ஜமாஅத்துர் ரஹ்மான் வி கிராமத்தில் குர்ஆன் பில் மஸ்ஜித் பள்ளிவாசல் நிலம் வக்பு விபரம்:—

ஏக்கர் 1¼ ப. 22 பிளேன் சர்வே நிர். 357 எழுதிய தேதி 6—9—1951. லைசென்ஸ் சர்வேயர் K. குமாரசாமி. ஒப்பனை நிர். 1506. ரிஜிஸ்டர் நிர். B. 20177. ஒப்பனை எழுதிய தேதி 30—12—1953.

இப்படிக்கு,
ஹாஜி பி. இ. சாகுல் ஹமீது,
காயல்பட்டணம்.



# சின்ன ஹதீது மாணிக்க மாலை



காயல்பட்டணம்
காமில் ஒலி ஸாம்ஷிஹாபுத்தீன் நாயகம் (றலி)
அவர்களால் இயற்றப்பட்டது.



வெளியிடுவோர்:
ஹாஜி பி. இ. ஷாகுல் ஹமீது,
மரைக்காயர் பள்ளிவாசல் தெரு,
காயல்பட்டணம் (S. I.)

இலங்கையில் ரூ. 1-00
விலை 50 பைசா.

بسم الله الرحمن الرحيم

## பதிப்புரை.

1947-வது ஆண்டில், ஸாம்ஷிஹாபுத்தீன் வொ
நாயகம் அவர்களது கந்தூரிக் கமிட்டியினரால் 'சின்
ஹதீது மாணிக்கமாலை' வெளியிடப்பட்டது. மறு பதி
வருவதை ஆவலுடன் அநேகர் எதிர்பார்த்துள்ளபடிய
அல்லாஹ்வின் உதவி கொண்டு அதன் மறு பதிப்
தமியேன் வெளியிட முன் வந்துள்ளேன்.

அரபித் தமிழில் எழுதப்பட்டுள்ள மூல நூலுடன்
பிட்டு திருத்தமுற இது வெளியிடப்படுகிறது. யாவருக்
இலகுவாக விளங்கிக்கொள்ளக் கூடிய முறையில் க
பதங்களுக்கு அர்த்தங்களும் தரப்பட்டுள்ளன. இ
பணியை, எனது வேண்டுகோளின் மீது சிறப்பாக நி
வேற்றித்தந்த எனது அன்பிற்குரிய அருமைச் சகோ
அல்ஹாஜ் மௌலவி மூ. முஹம்மது ஹஸன் காதிரி அ
களுக்கு எனது மனப்பூர்வமான நன்றி. அவர்களுக்
இந்நூலின் முதற் பதிப்பை சிறப்பாக வெளியிட்ட
ஷிஹாபுத்தீன் வொலி நாயகம் அவர்களது கந்தூரி கமி
யினருக்கும், பொதுநலச் சேவையில் எனக்கு ஊக்கமு
ஆக்கமும் அளிக்கக்கூடிய எல்லாமுமின் முஸ்லிம்களுக்
அல்லாஹுக்கு ஸுப்ஹானஹு வதஆலா ஈருலக நற்
கியங்களையும் தந்தருள்வானாக. ஆமீன். வஸ்ஸலாம்.

1—2—1385 }
2—6—1965 }

ஹாஜி பீ. இ. ஷாகுல்ஹமீது.
மரைக்காயர் பள்ளிவாசல் தெரு.
காயல்பட்டணம்.




ஸாம் ஷிஹாபுத்தீன் வொலிநாயகம் அவர்களது
கந்தூரிக் கமிட்டியினரால்
வெளியிடப்பட்ட முதற் பதிப்பின்

## முன்னுரை.

(வெண்பா)

உயிருக்குக் கேடுறுத்து மென்றுணர்ந்தும் நல்லார்
செயிர்கண்ட போதகற்றற் கஞ்சார் — உயர்வுடைய
மன்னர்மற் றோரென்னும் பின்னங்கள் பாராமல்
வன்மையொடு நன்மைபுரி வார்.

இச்சிறு கிரந்தம் இற்றைக்கு 300 ஆண்டுகளுக்கு
பு காயல்பட்டணம் காமில் ஒலி ஷெய்கு சுலைமான்
ப்பை ஆலிம் நாயகம் அவர்களின் அருந்தவப் புதல்வர்
ருள் இந் நகர் சிறுநயினார் பள்ளியில் சமாதி கொண்
ங்கும் ஹஸரத்ஷம்ஸுத்தீன் ஒலி, தஞ்சை மாவட்டம்
சக்கொல்லைப் பள்ளியில் சமாதி கொண்டிலங்கும் அஹ்
லெப்பை ஆலிம் நாயகம், இராமநாதபுரம் மாவட்டம்
க்கரை ஜும்ஆப் பள்ளிக்கருகே சமாதி கொண்டிலங்கும்
மாதிஹுர்ரஸூலும், பல அரிய அறபிக் கிரந்தங்களுக்கு
ஆசிரியரும், கொடைவள்ளல் சீதக்காதியின் மெய்ஞ்ஞான
குருவும், அவுரங்கஜீப் மன்னரின் மதிப்பிற்குரிய மஹானும்,
அகில இஸ்லாமிய உலகம் போற்றும் அறபிக்கவியரசருமான
ாமில்ஒலி ஷெய்குஸ்ஸதக்கத்துல்லாஹ் நாயகம் ஆகிய இம்
ம்மணிகளுக்குத் தம்பியும், நெல்லை மாவட்டம் (களக்காடு)

ஏர்வாடியில் சமாதி கொண்டிருக்கும் ஷெய்கு ஸலாஹுத்தீன் நாயகம் அவர்களின் தமையனுமாக இந் நகரில் அவதரித்து இஸ்லாத்தின் உயர்ந்த தத்துவங்களையும் வழிபாட்டிற்குவேண்டிய சட்டதிட்டங்களையும் எல்லோரும் உணரும்படி எளிய தமிழ் உருவமாய் சுருங்கச்சொல்லி விளங்கத் தந்து தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட இஸ்லாமிய மக்களின் இதயத்தை மெஞ்ஞானப் பிரகாசமாக்க நற்றொண்டு செய்து காயல்பட்டணம் அப்பாபள்ளியில் சமாதி கொண்டிலங்கும் சன்மார்க்க சீர்திருத்த வள்ளலும், ஹதீது மாலை, ரசூல் மாலை, நபி மாலை, நான்குயார்கள் மாலை, அலியார் மாலை. நான்கு இமாம்கள் மாலை, உலமா மாலை, சூரத்துல்குர்ஆன் மாலை, கல்யாணபித்அத் மாலை, புத்தி மாலை, தோகை மாலை, நஸீஹத்து மாலை, அதபு மாலை, அனந்தரப்பிரிவு மாலை, குத்பாமாலை, ஹனபிமத்ஹப் மாலை, மஃரிபா மாலை, நெஞ்சறிவு மாலை, தொழுகை மாலை, அர்க்கான் மாலை, புகையிலை விலக்குமாலை, மின்ஹாஜ் மாலை, காயத்துல் இஹ்திஸார் மாலை, ஜமாஅத் மாலை, மணம்புரி மஸ்அலா மாலை, கந்தூரிபித்அத் விலக்கு மாலை, இவை போன்ற ஆயிரம் கிரந்தங்களுக்குப் பேராசிரியருமான காமில்வலி ஷாமுஷிஹா புத்தீன் நாயகம் அவர்களின் திருக்கிரந்தங்களில் ஒன்றாகும்,

குறுகிய காலத்தில் மக்களுக்கு அறிவையூட்ட வழி தேடி பலப்பல துறைகளிலும் அறிஞர்கள் முயற்சித்துவரும் இக் காலத்தில் நம் மகானுபாவரின் அரிய சேவை அபரிமிதமாய்ப் பாராட்டத்தக்கதென்பதை எவரும் மறுக்க முடியாத உண்மையாகும்,

பல ஆண்டுகளாக அறபியைக் கற்று இஸ்லாத்தின் புனித சட்டதிட்டங்களை அறியக் கடமைப்பட்டிருந்த நம் தமிழ்முஸ்லிம்களுக்கு மழலைக்கு அமுதளிக்கும் அன்னையைப் போன்று எளிய தமிழில் இனிய நடையில் இஸ்லாத்தின் உயர்ந்த தத்துவங்களை அடக்கித்தந்த வள்ளல் ஷாமுஷிஹா



புத்தீன் நாயகம் அவர்களுக்கு நம் தமிழ்நாடு என்றும் கடமைப்பட்டுள்ளது என்பது மிகையாகாது.

இப்பேரறிஞரின் பல நூல்களையும் திரட்டி வெளியாக்க வேண்டுமென இந்நாயகத்தின் கந்தூரிக் கமிட்டியாராகிய நாங்கள் பந்நெடுநாள் கொண்டிருந்த ஆவலைப் பூர்த்திசெய்ய எல்லாத் துறைகளிலும் எங்களுக்குதவி இந் நூலை சரிபார்த்துத் தந்த எங்களின் மதிப்புக்குரிய அல்லாமா முப்தி நஹ்வி முகம்மது இஸ்மாயில் லப்பை ஆலிம் அவர்களின் பேருதவியைப் பெரிதும் பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம்.

தமிழ் முஸ்லிம் தோழர்கள் இந் நூலை முஸ்லிம் பாடசாலைகளில் கட்டாய வகுப்புப் பாடமாக வைத்து மக்களுக்கு ஊட்ட வசதியளிப்பதோடு மற்ற மாலைகளும் தொடர்ந்து வெளியாக ஆதரவளித்து ஊக்கந்தர அன்புடன் வேண்டி நிற்கும்.

ஷாமுஷிஹாபுத்தீன் ஒலியுல்லா
அவர்களின்
கந்தூரிக் கமிட்டியார்,
காயல்பட்டணம்.





# சின்ன ஹதீது மாணிக்கமாலை.

வெண்பா

வானுலகும் பூவுலகும் வாகாய் அறு நாளில்
தானமுட னேபடைத்த தக்கோனே—ஈனமில்லா
மவ்லா நபியுடைய வண்மை ஹதீ தின்மாலை
கவ்லாக யானுரைக்கக் காப்பு.

[கவ்ல்—சொல்]

தொங்கல்.

(1) ஏற்றமுள்ள ஆதி நாமங் கொண்டும்
எங்கள் நபிஸலாம் ஸலாத்துக் கொண்டும்
பார்த்துத் தெரிந்து யான் ஜவாஹிரிலும்
பாரமுள்ள துர்ருல் மன்தூரிலும்

(2 போற்றலுள இமாம் கஸ்ஸாலி தம்
பெருத்த கிதாபிலும் மற்றுள்ளதில்
கோர்த்து தெரிவுற்ற ஹதீதுமாலை
கூறவுதவி செய் கொற்றவனே·

(3) அதீகு அபூபக்கர் உமறுதுமான்
அண்ணல் அலி ஹஸன் ஹுஸைன் பொருட்டால்
வெற்றியுள யார்கள் பரக்கத்தாலும்
விண்ணேழமைத்தோனே துணை செய்வாயே!

[யார்கள்—ஸஹாபாக்கள்]

(4) மீரான் முஹ்யித்தீன் பரக்கத்தாலும்
பிஸ்தாமி ஷெய்கு பொருட்டினாலும்
சீராம் ஜுனைதுதம் பரக்கத்தாலும்
ஷிப்லியெனும் ஷெய்கு ஹுர்மத்தாலும்



(5) நேராம் பிஷ்றுதம் பரக்கத்தாலும்
நீதியிப்ருஹீம் ஹக்கினாலும்
பாரஸஹுல் ஷெய்கு சங்கையாலும்
படைத்த பெரியோனே துணைசெய்வாயே!

(6) மருதூம் சுலைமானார் பரக்கத்தாலும்
வண்மையுள்ள மக்கள் பரக்கத்தாலும்
தகுதியுள நல்லார் பொருட்டினாலும்
தக்க பெரியோனே துணைசெய்வாயே!

(7) கனவுதனில் கண்டேன் ஒருவர்வந்து
கவ்லாலுரைத்திட்டா ரென்னுடனே
கனதியுள இந்தக் கிதாபுதன்னைக்
கனமாய்த் தமிழுரை செய்வாயென்றே.

(8) மண்ணாலுரைதன்னில் பொன்னால் வாழை
வாகாய்ச் செலுத்தின பரிசுபோல
திண்ணமனுகாத புன்சொல்லினால்
சிறப்பாம் ஹதீதுரை செப்பக்கேளீர்.

[புன்சொல்—எளிய வார்த்தை]

## நபிமொழியின் நற்பயன்

(9) ஆதி ஒஹியினால் நபி மொழிந்த
அழகான ஹதீது மாணிக்கத்தை
நீதமுடன் கேட்டு அமல் செய்வோர்க்கு
நீதிநபி ஷபாஅத்துண்டாகுமே.

10) ஹதீதால் நாற்பது பாடமிட்டு
கனமாய் அதன்படி நடக்கலுற்றால்
அதிகமுள்ள உலமாக் கூட்டத்தில்
ஆவாரெனச் சொன்னார் ஆலநபி.

(11) அவர்கள் தனக்கு நான் மன்ருட்டங்கள்
ஆகிரந்தனிற் செய்வேனென்று
மவ்லா நபி யுரைத்தாரெனவே
வரிசை அபுத்தர்தா வுரைத்தார்.

(12) பீஸபீல்காரர் கூட்டந்தனில்
பேணிப் பிடித்தோர் களாவாரென
வாசமுள்ள நபி யுரைத்தாரென
வண்மை இப்னுஉமர் உரைக்கலுற்ருர்.
[பீஸபீல்—சன்மார்க்கத்திற்காக பாடுபடுதல்]

(13) எந்தவாசலாலும் சுவர்க்கம்
இனிதாய்ப் புகுதுங்களென்றுரைக்க
அந்தமுடன் சொல்லப்படுமெனவே
அழகாம் இப்னு மஸ்ஊதுரைத்தார்.

கலிமா

(14) வரிசைக் கலிமாவைத் தினங்கள்தோறும்
வண்மையுடன் நூறுமட்டோதிஞல்
இரவின் ஒளிவுபோல் நன்ருகவே
எவ்மல் கியாமத்தில் வருவானென்றே.
[எவ்மல் கியாமத்—இறுதித் தீர்ப்பு நாள்]

(15) அருக்கனைப் பித்து அலிக்காகவே
அஸறு தொழமட்டும் நிறுத்திவைத்த
அரிய நபியுல்லா(ஹ்) உரைத்தாரென
அழகானயார்கள் அருட்செய்தார்.
[அருக்கன்—சூரியன்]

(16) எல்லாதிக்ரிலும் வரிசையான
ஏற்றமுள திகிற் லாஇலாஹ
இல்லல்லா(ஹ்) வென்று சொன்ஞரெங்கள்
இந்தைபிருபாதி யாயழைத்தோர்
[இந்து—சந்திரன்]



(17) அவ்வல்கலாமும் ஆகிறுகலாமும்
அழகாம் கலிமாவாலாயிருந்தால்
ஒவ்வாப்பிழை அல்புவுண்டாகிலும்
உடையோன் பொறுப்பா னென்ருரிறசூல்.
[அவ்வல்-முதன்மையான- கலாம்—பேச்சு.
ஆகிறு—இறுதி. அல்பு—ஆயிரம்.]

(18) உங்களுடலுக்கு ஸகாத்தாவது
உண்மைக் கலிமா தஹ்லீலென்று
கங்கைப்புனல் ஸாவத்தாரில்வற்ற
கீர்த்தியாய்ப் பிறந்தோருரைத்தார்.
[கலிமாதஹ்லீல்—லாஇலாஹ இல்லல்லாஹ்]

(19) கலிமாதஹ்லீலென் கோட்டையென்றும்
கருத்தாயதில் புகுந்தோர்கள் என்றன்
அலமாம் அதாபை விட்டகல்வாரென்றும்
ஆதியுரைத்தா னென்ருரிறசூல்.
[அலமாம் அதாபு—வேதனை மிக்க தண்டனை]

(20) கடலின் நுரைபோல பிழையுண்டாகில்
கத்தோன்தனை நாடிக் கலிமாச்சொன்ஞல்
உடையோன் பிழை பொறுப்பானெனவே
ஒநாயுடன் பேசி யுரைத்தோர் சொன்ஞர்.

(21) லாஇலாஹ இல்லல்லா(ஹ்) வென்று
நாவாலுரைத்தோர்கள் முஸ்லிமென்றும்
வாயாலுரைத்திடார் காபிரென்றும்
வண்மை இமாமாஞேர் வழுத்தினராம்.

தொழுகை

(22) எல்லா அமலிலும் மிக வரிசை
ஏது அமலென்று நபியுல்லாவை
நல்ல அஸ்ஹாபிமார் கேட்டபின்
நலமாம் தொழுகை யென்றுரைத்தார் நபி.

(23) தெருவிலொரு ஆறு ஓடுமாகில்
தினமைந்துமுறை குளித்தால் அதில்
செருமியிருக்கின்ற ஊத்தைபோம்போல்
சேர்ந்த பிழையெல்லாம் தீருமென்றார்.
[செருமி—அடர்ந்துபோய்]

[24) ஹத்தை நிறைவேற்றுமென ஒருவர்
கலங்கி நபிபால் வந்துரைத்தவேளை
சத்தமழகான நபீயுரைத்தார்
ஸலாத்து நிஸ்காரம் எங்களுடன்

(25) வெற்றிபெறத் தொழுதாயோவென
விளம்பினரவர் தொழுதேனென்று
முத்திலுதிப்பானோர் மொழிந்தாரப்போ
முதலோன் பிழையெல்லாம் பொறுப்பானென்றே
[ஹத்து—தண்டனை]

(26) அழகாய் உளுச்செய்து அகத்தாலஞ்சி
அன்பாகத் தொழுதால் தோசங்கள்
தெளிவாய் அகலு மென்றுரைத்தாரெங்கள்
தீனின் குருவான நபியிறசூல்
[தீன்—சன்மார்க்கம்]

(27) துரிஸ்தாய் உளுச் செய்து உள்ளச்சமாய்த்
தொழுதால் பிழைவிட்டு அன்றுபெற்ற
கரையுங் குழந்தைபோலாவானென
கவன்றார் முகம்மது நபியிறசூல்.
[துரிஸ்தாய்—முறையாக. கரையும்—கரைந்தழும்.
கவன்றார்—உரைத்தார்.]

(28) ஸுப்ஹும் அஸ்றையும் தொழுதோர் சொர்க்கம்
துய்தாய்ப் புகுதுவார் அவர்களென
மவ்லா நபி சொன்னாரெனவுரைத்தார்
வண்மையுள அபூமூஸா வென்போர்.



(29) கனலிஉதிக்குமுன் அடையுமுன்பில்
கருத்தாய் வக்திலே தொழுதோர் வன்னி
முனிவாய்ப் புகுதாரென்றுரைத்தாரென
மேலாம் அபூஹுரைராவுரைத்தார்.
[கனலி—சூரியன். வக்து—வேளை. வன்னி—நரகம்,]

(30) வரிசைமிகவுள்ள நபிஸ்தனையே
வாகாய்த் தொழுதோர்களிறை காவலில்
பிரியாதிருப்பா னென்றுரைத்தாரென
பேசினார்யாரில் ஜுந்துபென்போர்.

(31) ஆகாமுனபிகாம் பேர்கள்மேலே
அல்லலுள தவம் இஷா [illegible]ஜ்றென்
றேகன் நபியுரைத்தாரெனவே
இயம்பினர் அபூஹுறைறாவென்போர்.
[அல்லல்—சங்கடம்]

(32) அமளிகருமங்கள் தனக்காயினும்
அழகான ஆலநபியிறசூல்
சமதமுடனின்று தொழுவாரென
சங்கையுள்ள யார்களுரைக் கலுற்றார்.
[அமளி—மிகுதி. சமதம்—பொறுமை]

(33) நடுவான அஸர் தொழுகைதன்னை
நன்மையுள மற்ற நிஸ்காரத்தை
அடவாய்க் கொடுவாருங் களெனவே
ஆதியுரைத்தா னென்றாரிறசூல்.
[நிஸ்காரம்—தொழுகை. அடவாய்க் கொடு
வாருங்கள்—விடாமல் நிறை வேற்றி வாருங்கள்]

(34) சிறப்பாம் அஸற்தனை விட்டோர்கள்தான்
செய்தஅமலெல்லாம் அழிந்ததென்ன
வெறுப்பாம் துனியாவில் வாழ்ந்திருந்த
வேதமுகம்மது நபியோதினார்.

(35) குடும்ப மிழந்துதான் முதலிழந்து
குறிகே டணுகியே இருப்போர்கள்போல்
நடுவாம் அஸற்விட்டோ ராவாரென
நவ்வியுடன்பேசி நவின்றோர் சொன்னார்
[நவ்வி—மான்]

(36) தொழுகை தனைவிட்டோர் நினைவாகவே
தோஷ மணுகிய காபிரென
ஒளிவாம் நபியுல்லா வுரைத்தாரென
உண்மையிமாம் தப்றானி சொன்னார்.

(37) நலமாம் தொழுகையை விட்டோர்கள் பேர்
நாறு நரகத்தின் வாசலின் மேல்
பலமாய் எழுதப்பட் டிருக்கு தென்ன
பிறையைத் தறைமீது அழைத்தோர் சொன்னார்

(38) எந்தத் தவத்தையும் விட்டோர் களை
இயம்பா ரவர்களைக் காபிரென
அந்த முள இந்தத் தவம் விட்டோரை
அருள்வார் யார்களும் காபி ரென்றே.

(39) உமறு அலி அப்துர் ரஹ்மான் ஜாபிர்
உண்மை அபுத்தர் தாமஆதும்
தமரு அபூஹுறைறா அவரும்
சிறப்பாம் இப்னு அப்பாஸ் அவரும்.
[தமரு—பெரியவர். திரை—கடல்[

(40) இப்னு மஸ்ஊதும் ஏற்றமான
இலங்கு மதிபோ லய்யூ பவரும்
புவியில் இமாமான ஹன்பலியும்
போற்றும் இஸ்ஹாகு றாஹவியும்.



(41) இப்னு முபாறக்கும் இப்றாஹீமும்
ஏற்றமுள ஹகம் அபூ பக்கரும்
நபியின் ஹதீதுரை செப்புகின்ற
நல்ல அபூதாவூ தும்ஸுஹைறும்.

(42) இவர்கள் தனையன்றி மற்றுமுள்ள
எல்லா இமாம்களும் உலமாக்களும்
மவ்லா வணக்கத்தை விட்டோர்களை
வண்மை யணுகாத காபிரென்றார்.

(43) வரிசை அலியபுத் தர்தா ஜாபிர்
வண்மை மிகவுள்ள அய்யூபாரும்
பிரிசமிகவுள்ள தொழுகை தன்னை
பிரிந்தோர் பெருங்காபி ராகு மென்றார்.

(44) ஏற்றமுள இஸ்லாம் தனக்கு
இலங்கும் அடையாளம் தொழுகை யென்றும்
சீற்றமுள தீனின் சென்னி யென்றும்
சிங்காரமான நபி யோதினார்.
[சென்னி—தலை]

(45) நாளைக் கியாமத்தில் முதல்கேள்வியாய்
நாயன் கணக்காகக் கேட்குமது
வாழும் தொழுகை யென்றுரைத்தாரென
வரிசையுள இமாம் நஸாயீ சொன்னார்.

(46) ஸுஜூதும் ருக்கூஉயும் நிறப்பாமலே
தொழுதோர் இஸ்லாமில் சாகாரென
குஷியாய் ஹுதைபாவும் பிலாலவரும்
கூறினார் கூட்டக் களரிதன்னில்.

ஸுன்னத்தையும் பேணுவீர்.

(47) பஜ்று தொழுகுமுன் ஒருசுன்னத்து
பதியிலுள வாழ்க்கை யடங்கலுக்கும்
குஷியாய் கைருமென் றுரைத்தாரென
குணமான ஆயிஷா உரைத்தார்.
[குஷி—குதூகலம். கைறு—நன்மை

(48) ளுஹறு தனக்குமுன் பின்னீர் ஸலாம்
துய்தாகப் பேணிக் கொடுவந்தோர்க்கு
பகையான நாறு ஹறுமாமென
பகர்ந்தார் முஹம்மது நபியிறசூல்.
[ஈர்—இரண்டு, நாறு—நரகம்.]

(49) நாலுறக் ஆத்து அஸறுக்குமுன்
நலமாய்த் தொழுவோர்க்கு ரஹ்மத்தென
நூலின்படி சொல்லி நடக்குமெங்கள்
நுண்மை முஹம்மது நபியோதினர்.
[நூல்—வேத ஆகமம், நுண்மை—அறிவு
நுட்பமுடைய.]

(50) வரிசை மஃரிபு தொழுகைக்குமுன்
வாகாய் ஒருஸலாம் நொப்பமாக
கருதித் தொழுவது சுன்னத்தென
கலைசேர் இமாம்புகாரி யுரைத்தார்.
[நொப்பம்—இலேசு.]

(51) வண்மை மஃரிபு தொழுகைக்குப்பின்
வடிவாயிரு றக்ஆத்துத்தொழ
உண்மையுள சுன்னத்தாகுமென
உரைத்தார் கிதாபினில் இமாம்முஸ்லிம்.



(52) பர்லாம் தொழுகைக்கு முன்பாகவே
பாங்காய் ஒருஸலாம் ஸுன்னத்தாக
திறமாக உண்டென் றுரைத்தா ரெங்கள்
சிறப்பாம் முஹம்மது நபியிறசூல்.

(53) இஷாவின் தொழுகைபின் நபியுடனே
இனிதாய் ஒருஸலாம் தொழுதேனென
குஷியாய் இப்னுஉமர் உரைத்தா ரென
கூறினு ரெங்கள் இமாம்புகாரி,

(54) வித்றுதொழாதபேர் என்னும்மத்தில்
விருப்பமுடனல்லர் எனவிறசூல்
வெற்றிபெறச் சொன்னுரென கிதாபில்
விளம்பினுர் அபூதாவூதென்போர்.

(55) ஜும்ஆ தொழுதபின் னிரண்டுஸலாம்
துய்தாக நீங்கள் தொழுவீ ரென்ன
செம்மல் நபியுல்லா சொன்னுரென
சிறப்பாம் அபூஹுறைறை ருவுரைத்தார்.

(56) ஆறுறக் ஆத்து மக்றிபு பின்
அழகாய்த் தொழுவது பனிரண் டாண்டின்
வீறும் வணக்கத்திற் கெதிரா மென
வீரர் முஹம்மது நபியோதினுர்.
[எதிராம்—சமமாம்]

(57) ரண்டுரக்ஆத்து உளுச்செய்த பின்
நலமாய்த் தொழுவது சுன்னத் தென
வென்றியுள நபி யுரைத்தா ரென
விருப்பமுள பிலா லுரைக்க லுற்றுர்.
[வென்றி—வெற்றி.]

(58) வரிசை மஸ்ஜிதில் புகுந்தால் ரண்டு
வண்மை யுளறக் ஆத்துத்தொழ
பிரிசமுள சுன்னத்தாகு மென
பேசினுர் நபி அபூதர்ருடன்.

(59) பர்லன்றியுள தொழுகை தன்னை
பாங்காய்த் தொழுவது வீடுதன்னில்
ஷறபாம் கைருமென் றுரைத்தா ரெங்கள்
சந்தோஷமான நபி யிறசூல்.
[ஷறபு—சிறப்பு.]

(60) விதியாம் பர்லுக்குப் பின் வரிசை
மிகுந்த தொழுகை ராமுழித்துத் தவம்
குஷியாய்த் தொழுவதென் றுரைத்தா ரெங்கள்
கோஜா முஹம்மது நபி யிறசூல்.
[ரா—இரவு.]

(61) முழித் துத்தொழுவது ஆதிபக்கல்
முடுகலெனவுந் தீங்கான வையை
அழித்து விடு மென்றும் ஸாலிஹீங்கள்
ஆதத் தெனவுஞ் சொன்ன ரிறசூல்.
[ஸாலிஹீன்—சான்றோர். ஆதத்து—வழக்கம்]

(62) சுப்ஹு தொழுத பின் திக்று செய்து
துய்தா யிருந்து பின் பொழு தெழுந்தால்
தவனமாய் ரண்டு ருகூவு செய்கல்
சங்கையுள ஹஜ்ஜுக் கெதிரா மென்றார்.
[பொழுது—சூரியன். எழுந்தால்—சுமார் வல்லயப் பிரமாணமளவுக்கு உயர்ந்த பின்பு. தவனம்—ஆசை]

(63) ஏற்ற மிகவுள்ள லுஹாத் தொழுகை
இனிதாகப் பேணித் தொழுங்க ளென
மாற்ற மணுகாத யார்களுடன்
வரிசை வஸிய்யத்தா யுரைக்க லுற்றார்.
[வரிசை—நல்லுபதேசம்]



(64) வள்ளல் நபியுல்லா லுஹா ஸலாத்தை
வண்மையுடன் பேணித் தொழுவா ரென
பள்ளிதனிலிருந் தறிவு செப்பும்
பார உலமாக்கள் பகர லுற்றார்.

ஜமா அத்தைப் பற்றிப் பிடிப்போம்

(65) ஜமாஅத் துடன்கூடித் தொழுந் தொழுகை
தனித்துத் தொழுவதில் இருபத் தேழு
நமாஸில் அதனமா மென வுரைத்தார்
நெறியில் மிகுந்தநம் நபியிறசூல்.
[அதனம்—அதிகமேன்மை]

(66) குருடாய் ஒருவர்தாம் நபிபால் வந்து
கோஜாவே எனக்காமோ தொழ
கருவான வீட்டில் உன்னளவில்
கனதியுள பாங்கு கேட்குமோ வென்

(67) றருமை நபிகேட்ட போத உமா
அழகாய் எனக்கதான் கேட்கு மென
கருதி யுரைத்தபின் கூடித் தொழ
கடனு மெனச் சொன்னார் காவல்நபி.
[அஉமா—அந்தகர். அதான்—தொழுகையின் அழைப்பு—பாங்கு]

(68) பள்ளி தனில் வந்து இமாமுடனே
பாங்காய் திஷ்காரஞ் செய்யா னுமாய்
வெள்ளிக் கிழமையில் குத்பாத் தவம்
விரும்பித் தொழா னுமாய் இருந்தோர் கள்தான்.

(69) தெள்ளிதாய்ச் செய்யும் தவமும் நோன்பும்
சேராதழியு மென் றுரைத்தா ரெங்கள்
வள்ளல் இப்னு அப்பா ஸென்பவர்
வளர்ந்த களரியில் தொனி யாகவே.

(70) ஈயந்தனைக் காதில் ஊத்துவது
எளிதாம் அதான் பாங்கைக் கேட்டும் கூடி.
துய்ய சலாத் தில்லா திருப்போர்க் கென
சொன்னர் அபுஹுறைறு வென்பவர்.

(71) பள்ளிதனக் கசலான பேர்கள்
பள்ளி தனிலன்றி தொழுதா லந்த
மெள்ளத் தவஞ் செய்யும் தொழுகை எல்லாம்
வீணு யழியுமென் றுரைத்தார் அலி.

(72) சுபுஹு தனில் இஷாத் தொழுகை தன்னில்
துரிஸ்தாய் இமாமுடன் தொழா தோர்களைக்
கவலு முரையினல் முனபி கென
கவல்வோ மெனச் சொன்னர் இப்னு உமர்.
[கவலும்—வருந்தும். கவல்வோம்—சொல்வோம்.]

(73) மூன்று வகையார்கள் தொழும் தொழுகை
முடுகும் செவிகாது தன்னைவிட்டுத்
தாண்டி உயராதென் றுரைத்தா ரெங்கள்
சங்கை முஹம்மது நபியிறசூல்.

(74) நாயன் தனைவிட்டு ஒழித்த பயல்
நலமாம் புருஷரை வெறுத்த மங்கை
தூயமஃமூம்கள் பொருத்தமற்ற
துன்மை யணுகிய இமாமு மென்றார்
[நாயன்—எஜமானன். பயல்—அடிமை
துன்மை—தீமை]

(75) ஸப்புதனைச் சேர்ந்து தொழுதோர் களைத்
தம்பிரான் சேர்ப்பான் கருணையாலே
அப்புதனி லற்பம் தன்னைக் கொண்டு
அஸ்ஹாபி மார்க்கு அளித்தோர் சொன்னர்.
[ஸப்பு—அணிவரிசை. தம்பிரான்—இறைவன்
அப்பு—தண்ணீர்]



(76) வரிசை இமாமுக்குமுன் தலையை
வாகாய் உயர்த்துவோர் தலையை நாயன்
பிரியும் கியாமத்தில நாய்த்தலை போல்
பெரியோ னெழுப்புவா னென வுரைத்தார்.

(77) திரும்பி பார்க்குதல் தொழுகை தன்னில்
ஷைத்தான் இப்லீஸு ராஞ்சலென
கரும்பு போலுரை செப்பு மெங்கள்
கண்ணின் மணியான நபினர் சொன்னர்.
[உராய்ஞ்சல்—உராய்தல்]

## ஜக்காத்து

(78) பெரியோ னுவப்பான தொழுகை தன்னை
பேசத் தொலையாது ஸகாத் துடைய
வரைவு தனைக்கேட்டு அறிந் திருங்கள்
வையந் தனிலுள்ள மனிதர்களே.
[பெரியோன்—இறைவன்]

(79) உடைமை தனைக்கூட்டி தங்கரித்து
உடையோன் விதித்த ஸகாத் திருமல்
கொடுமை யணுகியே யிருக்கு கின்ற
குற்றமுள பொல்லார் தங்களுக்கு.

(80) கொடிய அதாபு கொண் டச்சமாகக்
கூடும் கியாமத்தில் அதனைக் காய்ச்சி
நெடுகும் முதுகிலும் நெற்றியிலும்
நெறியாம் விலாவிலும் சூடுவைக்கப்.

(81) படுமென்றிறை குருன் வேதந்தன்னில்
பகர்ந்தா னெனபபய காம்பருக்கு
மடியா துரையாக தப்ஸீர் தனில
வரிசை யுலமாக்கள் வகுத்தனராம்.
[நெடுக—நீணட. நெறி—திமிர்ந்த. பயகாம்பர்—
நபிகள் நாதர் (ஸல்). மடியாது—பொய்யாகாது]

(82) நந்தன் முதலுக்கு ஸகாத் திருத
சங்கை யணுகாத பேர்கள் தானும்
முந்த நரகத்தில் வீழ்வா ரென
மொழிந்தார் முஹம்மது நபியிறசூல்.

(83) ஸகாத்தை யளியாம லிருந்தமுதல்
தேறும் கியாமத்து நாளதிலே
ஹக்க னருள்ப்படி பாம்பாய் வந்து
கடைவா யிரண்டையும் கடிக்கு மென்றார்.
[தேறும்—நிச்சயமான]

(84) நாலுகாரியம் இஸ்லாம் தனில்
நாயன் பறுலாக்கி ஞளதிலே
கோலம்பெற மூன்று கொடு வந்தாலும்
கூடாதெனச் சொன்னார் குதாவிறசூல்.
[குதாவிறசூல்—ஆண்டவனுடைய திருத்தூதர்]

(85) வரிசை தொழுகையும் ஸகாத் தளிப்பும்
வன்மையுள நோன்பும் மக்கந்தனில்
பிரிசமுடன் ஹஜ்ஜு செய்கிறதும்
பேணி யுரைத்திட்ட நாலு மென்றார்.

(86) ஸகாத் தளிப்பது இஸ்லாம் தனில்
சிறப்பான ஸிறுத்தாகு மென்று
ஷக்காம் உரைபேசார் சொன்ன ரென
தப்ருனி உஸ்தாது செப்பினர்.
[ஸிராத்து—நேர்பாதை. ஷக்கு—சந்தேகம்]

(87) கணக்கு நெறியாகப் பார்த்திருமல்
கண்டபடி கொடுத்தால் ஸகாத்து
இணக்கமுட னிறுபடா தெனவே
ஏற்றமுள உலமாக்கள் சொன்னார்.

(88) எல்லா அமல்களும் செய்தா லுமாம்
ஏற்றமுள ஸகாத்திருத பேர்க்கு
அல்லா(ஹ்) முனிவுண்டாம் கியாமத்தி லென்
றழகான ஒலிமார்கள் சொன்னார்:



## நோன்பு

(89) ஸகாத்துரை தன்னில் துள்ளிபோலாய்
செப்பியுரைத்தபின் நோன்புடைய
ஹக்காம் கருமத்தில் சிறுகச் சொல்ல
காசினியுள்ளோர் கேட்டிருங்கள்.

(90) வரிசை ரமலானின் பிறைக் கண்டபேர்
வன்மையுள நோன்பு பிடியுங்களென்
றரியோன் குரானதி லுரைக்க லுற்றான்
அஹ்மதிற சூலுல்லா தமக்கே.

(91) றமலான் தனில் ஒரு நோன்பு விட்டால்
நினைவாக விடையன்றியிலே
ஜமானுலுள காலம் பிடித்தா லந்த
ஸவுமுக் கெதிரல்ல வென நவினார்.
[ஜமான்—காலம். ஸவும்—நோன்பு]

(92) கணவன் விடையன்றி நபில் நோன்புகள்
மனைவி பிடிக்க ஆகா தெனவே
மணமாமுஹம்மது உரைத்தாரென
வள்ளல் இமாம் புகாரீ யுரைத்தார்:

(93) நன்மையுள நோன்பு நரகம் விட்டு
நல்ல அரணென்று உரைத்தா ரென
தின்மை யணுகாத உதுமா னென்போர்
செப்பினரென்றார் இப்னுஹஜர்.
[அரண்—காவல்]

(94) வரிசையுள குரு ஆனும் நோன்பும்
வல்லானிடத்திலே கொடுவந்தோர்க்கு
உரிமை ஷபா அத்துச் செய்யுமென
ஓதினரெங்கள் நபியிறசூல்.
[கொடுவந்தோர்—கொண்டு வந்தோர்.
ஷபாஅத்து—மன்றாட்டம்]

(95) ஆதி தனை நாடி றமலான் தன்னில்
அஞ்சி யலங்கார மாய்ப் பிடித்தால்
நீத மணுகாத முன்பிழைகள்
நீதிபொறுப்பானென்ருரிறசூல்.
[நீதி—இறைவன்]

(96) றமலான் தனில் நோன்பு வைத்தபின்பு
நெறியா யபம் நாக்கு வயிற்றைப் பேணி
சமதமுட னிருந்தோர்க்குச் சொர்க்கம்
தனக்குப் பிணையானென்ரு ரிறசூல்.
[சமதம்—பொறுமை]

(97) கஸ்தூரி வாசம் தனில் மணமாம்
கனதியுள நோன்பு பிடித்தோர்கள் வாய்
விஸ்தீன முள்ளான் பக்கலென
விளம்பினு ரெங்கள் நபியிறசூல்.
[விஸ்தீனமுள்ளான்—இறைவன்]

(98) வரிசை மிகவுள்ள நோன்பு வைத்து
வாகாய்த் துயில் செய்தோர் துயில் நித்திரை
பிரிசமணுகிய இபாதத் தென்று
பேசினு ரெங்கள் நபியிறசூல்.
[இபாதத்—வணக்கம்]

(99) வன்மையுள நோன்பு பிடித்த வர்க்கு
வாகாய்ப் புனல் கொடுத் தோர்க்கு எந்தன்
உண்மை ஹவுலின் நீர் கொடுப்பே னென்ருர்
ஓசை முஹம்மது நபியிறசூல்.
[புனல்—தண்ணீர். ஹவுளின்—ஹவுளுல்கவுதர்
தடாகத்தின். ஓசை—கீர்த்தியுடைய]

(100) நன்மை மிகவுள்ள நோன்பு தன்னை
நலமாய் பிடித்தோர்கள் துறப்பித் தோர்கள்
தின்மையடங்கலும் தீருமென்றும்
தீ விட்டுரிமையும் கிட்டு பெற்ருர்.
[துறப்பித்தோர்—நோன்பு திறக்க உணவளித்தோர்.
தீ—நரகம்]



(101) அர்ஷு நிழலின் கீழ் நிறுத்தி வைத்து
அழகா முடுருதல் அவர்களுக்கு
குர்ஸு அமைத்தவன் கொடுப்பா னென
குறைந்த துனியாவை இகழ்ந்தோர் சொன்ஞர்.

(102) ஏற்றமுள நோன்பின் கருமம் தன்னில்
இம்மிபோல் செப்பி யுரைத்த பின்பு
சீர்த்தியுள ஹஜ்ஜின் காரியத்தில்
சிறுக உரைத்திடப் புவியோர் கேளீர்
[சீர்த்தி—மிகுபுகழ்]

## ஹஜ்ஜு

(103) மக்கம் தனக்குப் போய்வர உடமை
வாகாய் உடையோர்கள் மக்கந் தன்னில்
ஹக்காக ஹஜ்ஜு செய்யாதபேர்
கருணை யணுகாத யஹூதியாக.

(104) ஷக்கில்லாமலே நஸ்ருனியாய்ச்
சாவாரெனச் சொன்ஞர் நபியெனவே
தர்க்கம் பறையாத அலியு மபூ
சங்கை யுமாமத்தும் உரைத்தார்களே.

(105) மக்கந்தனிற் சென்று ஹஜ்ஜு செய்யா
வண்மை யணுகாத காபிர்கள் மேல்
ஹக்காய்த் திறை போடுவே னெனவே
கருணையுமரு கத்தா புரைத்தார்.
[திறை—கப்பம்]

(106) சிறப்பாம் ஹஜ்ஜு செய்யாத வொரு
சீமானிறந்தான் என்னயல் பாகத்தில்
வெறுப்பாய் தொழுவித்தேன் இல்லை யென்ருர்
மேலாம் ஸஃதுபுனு ஜுபைறு.

(107) நன்மையுடன் கூடி ஹஜ்ஜு செய்தால்
நாயன் அவன் குற்ற மடங்கலையும்
தின்மை யணுகாத பாலகன்போல்
தீர்ப்பா னெனச் சொன்ஞர் பயகாம்பரே.

(108) கபூலாம் ஹஜ்ஜுக்குக் கூலியில்லை
கனகபதி சொர்க்கம் தவிரவென
மவுலா நபி யுரைத்தா ரெனவே
மணமாய் ஸவாஜிரில் ஷெய்குரைத்தார்.

(109) நடந்துபோய் ஹஜ்ஜு செய்யும் பேர்க்கு
நாளைகியாமத்தில் ஆதிநாயன்
கடந்த அடிக்கேழு நூறு லட்சம்
கருணை யுள நன்மை கொடுப்பானென்றார்.

நாயகம் (ஸல்) அவர்கள்
முனிந்து சபித்த பொல்லாத சிலர்

(110) சீவனுள வஸ்து அடங்கலுக்கும்
ஸெய்யிதாய் வந்த நபியிறசூல்
நாவதைக்கொண்டு லஃனத்திட்ட
நன்மையணுகாரைப் பேசக்கேளீர்.
[லஃனத்து—சாபம்]

(111) பொலிசைக் களித்தோர் கள் வாங்கினோர்கள்
பரிவாய் எழுதினோர் சாட்சிக்காரர்
கிரிசை கெடுருபம் தனைச் சமைத்தோர்
கீழாமிருகத் தோடணை வோர்களும்.
[பொலிசை—வட்டி. கிரிசை—கிரியை, பூசை]
அணைவோர்—புணர்ச்சி செய்வோர்]

(112) ஊரார் நிலந்தன்னை ஹக்கின்றியே
உவந்திங் கெடுத்தோரும் கண்ணில்லானை
நேராம் வழிகெடுத்தோர்களையும்
லஃனத்துச் செய்தார் நபியிறசூல்.
[ஹக்கு—உரிமை]

(113) லூத்துநபி கவ்ம களமல்செய் வோரும்
உண்மை யணுகாக் கட்டுரைப் போர்களும்
சாத்திரம் சொல்வோர் பக்கல்வந்து
சங்கை யணுகாமல் கேட்பவரும்.



(114) வல்லிமார் பின்னில் அணைவோர்களும்
மாதவிடைதனில் அடுப்போர் களும்
சொல்ல ஹராமான ஒப்பாரிகள்
சொல்லி யழுவோரும் சூழ்ந்தோர் களும்
[வல்லிமார்—பெண்கள்]

(115) பின்னில் தொழுவோர்கள் பொருத்த மற்ற
பிரிசமணுகாத இமாமவரும்
மன்னனெனும் அகமுடையான்றனை
வாகாய் வெறுத்துப் பாயகன்ற வளும்.
[அகமுடையான்—கணவன்]

(116) ஆகாக் களவுகள் செய்வோர் களும்
அஸ்ஹாபி மாரை வைவோர் களும்
ஏகப் பெரியவன் அம்ருநஹி
இம்மைதனில் விட்ட பேர்களுமாம்.
[வைவோர்—இகழ்வோர்.
அம்ருநஹி—ஏவல் விலக்கல்]

(117) பூவைமார் கோலம் கொண்டோர் களும்
புருஷன் மார் வேசம்கொண்ட வளும்
பாவைதனில் சுறுமா யிடாளும்
பரிவாய் மறுதோன்றி யிடாதவளும்
[கோலம்—வேடம். பாவை—கண்]

(118) புருஷன் தனைப்பயல் வெள்ளாட்டியை
பொல்லா உரையினால் பிரிப்போர் களும்
கருவிதனைக் கொண்டு உடைப்பளவில்
கரத்தால் இஷாறத்துக் காட்டுவோரும்
[கருவி—ஆயுதம். உடைப்பு—தகர்த்து அழித்தல்.
இஷாரத்து—சமிக்கை]

(119) சூடுவதனத்தில் வைப்போர் களும்
துய்ய கணவன் உத்தார மன்றி
வீடுதனை விட்டுப் பிரிந்தவளும்
மேலாம் லஃனத்தில் ஆவா ரென்றார்.
[வதனம்—முகம். உத்தாரம்—உத்தரவு]

(120) கள்ளுக் குடித்தோரும் அகற் கொத்தாசை
கருதி கருத்தாகச செய்வோர் களும
தெள்ளிதாய் கபுறு தனில் விளக்கு
தீங்காக வைக்கும் பேர்கள் மேலும்

(121) தள்ளுண்ணும் பாவி மேல் விதித்த
தகுமான ஹத்தை விலக்கு வோரும்
வள்ள லெனும் ஆதி யிவர்கள மேலே
வாகாய் முனிவா னென்றுரிறசூல்.
[தள்ளுண்ணும்—விலக்கப்படும்.
ஹத்து—மார்க்கத் தண்டனை]

(122) ஸகாத்து அளியானும் தன் வமிசம்
தள்ளி வேறினம் சேரு வோனும்
ஹக்காய் உரிமை பெற்றுனை விட்டுக்
கருதி யொருததிபால் சேர்ந்த வனும்

(123) அயலாம் ஸ்திரீயுட னணைந்தவனும்
ஆகா நிகாஹ் கையாற் செய்தவனும்
பயலாம் அடி[illegible]
பதற அடிப்போனு மாகு மென்ருர்.
[கையாற்செய்தவன—வைப்பாட்டியாக வைத்தவன்]

(124) தாயு மகளையும் வைதோரையும்
சாடை யுரைப் போரும் கைக்கூலிகள்
நாயன் ஹுக்மிலே வாங்கு வோரும்
நலமாம் சாட்சியை மறைப் போர்களும்
[சாடை—கோள். ஹுக்மு—தீர்ப்பு]

(125) தவசம் தனைக்கட்டி விலையேறும் நாள்
சங்கை யணுகாமல் விற்போர்களும்
தவனமுடன் வந்த முஸ்லிம் கட்கு
தகுமா முதவி செய்யாத வனும்
[தவசம்—உணவு தானியம். தவனம்—ஆவல்,தாகம்]

(126) கிருபை யணுகாத அரசர் களும்
கிளையோ டுறவில்லா முறிந்தோர் களும்
நெறியாம் நிகாஹு செய்யாத வரும
நிலத்தில் பித் அத்தைச் செய்வோர் களும்



(127) தனியே ஸபர் செய்வோர் உயிருள்ளதைச்
சாத்தி இலக்காக எய்வோர்களும்
முனிவாம் குபாடங்கள் செய்வோர் களும்
மோசமுள ராகம் பாடுவோரும்

(128) கப்றுதனில்பினு எடுப்போர்களும்
கப்று தனைக் காணப்போற பெண்ணும்
சபையில் நடுவிலே இருப்போர்களும்
ஸானீதனிற் கிழடானுமாமே.
[பினு—கட்டுமானம். ஸானீ—விபச்சாரி]

(129) வெட்டைதனில் நிற்கும் நிழல்மரத்தை
வெட்டிக் கழைநதோரும் சொக்கட்டான்கள்
நட்டி விளையாடும் தோசிகளும்
நாயன் களாவைப் பொய்யாக்கி னேரும்.
[களா—கற்பனை]

(130) வேற்றுமுடிமயிர் சேர்க்கும் பெண்ணும்
மென்மையுள சட்டைதன்னையிட்டு
ஏற்றபருமுறி யுள்ளி லுடார்
இவர்கள் லஃனத்தில் ஆவாரென்ருர்.
[பருமுறி—தடித்த உடுமானம். உடார்—
உடுத்ாதவர்.]

(131) என்றன் நடபடி விட்டோர் களும்
ஏகன் குர்ஆனைப் பேதகமாக்கியும்
அந்தமுள அன்னை தன்னை விட்டு
அவள் தன் குழந்தையைப் பிரிப்போர்களும்
[நடபடி—ஒழுக்கம்]

(132) இந்தவகையான பேர்களெல்லாம்
ஏகன முஹம்மது நபியிறசூல்
சந்தமுற முனிநதோர்களென
ஸவாஜி றெனுங் கிதாபில் உரைத்தார்.
[சந்தமுற—வேதவிதிப்பிரகாரம்]

(133) ஆலமடங்கலும் ஆறு நாளில்
அமைத்த பெரியோனே எங்களை நீ
ஆலம் தனில் முனிவான பேரில்
ஆக்காய் ரிளுவானில் ஆக்கு ஆமீன்:
[ரிளுவான்—திருவுளப்பொருத்தப

(134) புகழ்ச்சி யடங்கலும் உனக்கிலாஹி
புகழ்சேர் நபி நயினூர்க்கு ஸல்லி
மகிடசியுள ஆல்க்கும் யார் களுக்கும்
வண்மையாய் ஸல்லிம் யா இலாஹி.
[இலாஹி—என்னிறைவா ஸல்லி—ஸலாவத்து
சொல்வாயாக. ஆல்—கிளைஞர். ஸல்லிம்
ஸலாம் உரைப்பாயா

(135) செய்கு அஹ்மதிப் னுஹஜர்க்கும்
செப்பமுள உலமாக்களுக்கும்
மாகம் அமைத்தோனே நீ இற்ஹம்
வர்ள வஃபு அன்ஹும் இலாஹி.
[செய்கு—பெரியார். செப்பம்—இணக்கம். மாக
—ஆகாயம். இற்ஹம்—கருணைபாலிப்பாயாக
வர்ள—மேலும் பொருந்திக்கொள்வாயாக. வஃ
அன்ஹும்—மேலும் அவர்களை மன்னித்தரு
வாயாக

(136) றப்பி இகுபிறன் லீ அபவய்ய
றஹ்மதன் மின்கற்ஹம் வல்துபன்
றப்பனு றப்பனு றப்பனு
றவ்விறு பிறஜா அபுவின்

[இறைவா! எனக்கும் எனது தாய்தந்தையருக்
உனது அருள்கடாசங்கொண்டு பிழை பொறுத்த
வாயாக மேலும் எங்களுக்கு உள்ளன்பு கொண்டு கிரு
செய்தருள். எங்கள் நாயனே, எங்கள் நாயனே, எா
நாயனே! உனது மன்னித்தல் எனும் பேராதர
கொண்டு எங்களுக்கு நற்கருணை பாலித் திடுவாயாக
ஆமீன்.

## முஸ்லிம் சகோதரர்களுக்கு முக்கிய அறிவிப்பு

இலங்கை, மாத்தளையைச் சார்ந்த அலுவிஹாரையில்
...துர் ரஹ்மான் விகிராஅதில் குர்ஆன் பில் மஸ்ஜித் பள்ளி
... அல்லாஹ்வுக்காக வக்பு செய்யப்பட்டுள்ளது.

... பள்ளிவாசல் & சொத்து நிருவாகங்களைக் கவனிக்க
...ண்ட கமிட்டியினர் நியமிக்கப்பட்டுள்ளனர்

) ஜனுப் கா. மு. முஹிய்யதீன் பிச்சை
) ,, மு. க. முஹம்மது ஹஸன் மரைக்கார்
) ,, மீ. உமருத்தீன் மரைக்கார்
) ,, நெ. மி. பாஜா மரைக்கார்

மேற்கண்ட கமிட்டியினர்களுக்கு உதவியாக மேல்பார்த்து
...றப் ஹாஜி M. K. ஷெய்கு அலி அவர்களை நியமிக்கப்
...ளது.

மேலும், இந்தியா, காயல்பட்டணம் ரயில்வே ஸ்டேஷ
... பக்கத்திலுள்ள மஸ்ஜிது ஹமீது பள்ளிவாசலையும். திருச்
...ரிலுள்ள மஸ்ஜிது முஹிய்யத்தீன் பள்ளிவாசலையும்
...ஹ்வுக்காக வக்பு செய்யப்பட்டுள்ளது எல்லா மூமின்முஸ்லீம்
...ரர்களும் மேற்படி பள்ளிவாசல்களுக்குத் தங்களாலான சகா
... செய்து வருமாறு வேண்டிக் கொள்கிறேன்.

...ஸ்ஜிதுகள் இல்லாத எத்தனையோ ஊர்கள் உள்ளன.
...ல் மஸ்ஜிது கட்டப் பாடுபடுங்கள்—உழையுங்கள். முயற்சி
...ாள்ளுங்கள். அல்லாஹ் வழி விடுவான். ஹிம்மத்து—
...கொள்ளுங்கள். தளர்ச்சி அடையாதீர்கள். நற்கருத்து
(13 ஒற்றுமையாக வாழ்வோம். வஸ்ஸலாம்.

இப்படிக்கு,
ஹாஜி பி. இ. சாகுல் ஹமீது,
காயல்பட்டணம்.